Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



# அன்னை ஸ்ரீமதி சரஸ்வதிபாய்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்னை ஸரஸ்வதிபாய் பூஜித்த ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ஹ விக்ரஹம்

...gavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

வாழ்க்கைச் சுருக்கம்

## அன்னை ஸ்ரீமதி சரஸ்வதிபாய்

ஸ்ரீ பாண்டுரங்க மந்திரம்
டாக்டர் ரங்காச்சாரி ரோட். மதராஸ்-4.



அன்னை சரஸ்வதிபாயும் அவர் கணவர் M. ஸ்வாமிராவும்

**ஆனந்தா**

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

# அன்னை ஸ்ரீமதி சரஸ்வதிபாய்

---

புண்ய பூமியாகிய நமது பாரத நாட்டில் ஆதி காலம் தொட்டு இன்றுவரை பலபல மகான்களும், பக்தர்களும், மகரிஷிகளும் தோன்றி சன்மார்க்கத்தையும், தெய்வபக்தியையும் மக்களிடையே பரப்பி வந்துள்ளார்கள். சங்கரர், மத்துவர், இராமானுஜர், ஆழ்வார்கள், நாயன்மார்கள், துக்காராம், ஞானேஸ்வரர், கபீர்தாஸ், சைதன்யர், இராமகிருஷ்ணர், விவேகாநந்தர், ரமண முனிவர், சுவாமி சிவானந்தர், அரவிந்தர்—இம்மகாபுருஷர்களின் பெயரை கேள்விப்படாத இந்தியனே இருக்க முடியாது. இந்த மாபெரும் புருஷ சிரேஷ்டர்களின் பரம்பரையில் வந்தவர் என்று துணிந்து சொல்லக்கூடிய ஒரு மகா உத்தமி, பகவான் பாண்டுரங்கனின் பக்தை ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்கள் மைலாபூரில் சமீபகாலம் வரையில் வாழ்ந்திருந்து அரும்பெரும் காரியங்களை சாதித்த மகிமையை எண்ண எண்ண வியப்படையாமலிருக்க முடியாது. அவருடைய சரித்திரத்தை முழுதும படித்தவுடன் நம்மை அறியாமலே நமது கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகும்; கரங்கள் அஞ்சலி செய்யும்; தலை வணங்கும்.

பக்த விஜயத்தில் கூறப்படும் பல பக்த சிரேஷ்டர்கள் பிறந்த பொன்னாடாகிய மகாராஷ்டிரத்தின் தலைசிறந்ததொரு நகரமாகிய கோலாபூரில் வசித்து வந்த சில மகாராஷ்டிரக் குடும்பங்கள் சத்ரபதி சிவாஜியின் காலத்திற்கு பின் மகாராஷ்டிரத்தை விட்டு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



புறப்பட்டு தென் தேசம் வந்து தஞ்சாவூர் முதலிய ஊர்களில் குடியேறின. அவ்வாறு குடியேறிய குடும்பங்களில் ஒன்றில் தான் 1897ம் வருடம் ஜனவரி மாதத்தில் D. வெங்கட்ராவ் என்பவருக்கும் சுந்தராபாய் என்னும் அம்மையாருக்கும் தவபுதல்வியாய் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்கள் அவதரித்தார். இவர் தம் பெற்றோர்களுக்கு (நான்கு குழந்தைகளில்) இரண்டாவது குழந்தையாக பிறந்தார். மூத்த தமையனார் D. V. நாகராஜராவ், D. V. ராமாராவ் இளைய சகோதரர். பம்பாயில் வேலையிலிருந்து ஓய்வு பெற்றது முதல் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் இல்லத்திலேயே வசித்து வருகிறார். துளசிபாய் இவரது இளைய சகோதரி.

பதினொருவது வயதிலேயே ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் திருமணம் நடந்தேறியது. இவரது கணவர் ஸ்ரீ M. ஸ்வாமிராவ் மைசூர் திவானாக பெயரும் புகழும் பெற்று விளங்கிய ஸ்ரீ பூர்ணய்யாவின் வம்சத்தில் உதித்தவர். சென்னை அகவுண்டன்ட் ஜெனரல் ஆபிஸில் ஆடிடர் வேலை பார்த்து வந்த இவர் இப்போது ஓய்வு பெற்று தமது குழந்தைகளுடனும் பேரன் பேத்திமார்களுடனும் இருந்து வருகிறார்.

ஸ்ரீமதி சரஸ்வதியாய் அவர்கள் தமது கணவருடன் இனிதே இல்லறம் நடத்தி ஆறு குழந்தைகளை பெற்றெடுத்தார். அவ்வாறு குழந்தைகளில் இரட்டையாக பிறந்த ஆண் குழந்தைகள் இரண்டும் தவறிவிட்டன. அக்குழந்தைகளில் ஒன்றாகிய ஸ்ரீபாது என்பவன் மீது அம்மையார் தமது உயிரையே வைத்திருந்தார். அவன்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இறந்ததும் அவர் அடைந்த மனவேதனை சொல்லத்தரமன்று. சதா சர்வகாலமும் குழந்தையின் நினைவாலேயே உருகி வாடினார். இக்குழந்தையின் உடலை மயானத்தில் வைத்திருந்தபோது கருடன் ஒன்று உடலின் மேலே பறந்து வந்து உடலை வலம் வந்ததாம். இச்செய்தி கேட்டு அன்னையார் மனமுருகி ஆனந்த கண்ணீர் வடித்தார். குழந்தை இறந்த நான்காவது நாள் சரஸ்வதிபாய் அவர்கள் கனவு ஒன்று கண்டார்கள். அக்கனவில் ஸ்ரீபாதன் தோன்றி "அம்மா நீ ஏன் எப்போதும் கவலைபட்டு கொண்டும், என்னைபற்றி நினைத்து அழுது கொண்டும், இருக்கிறாய்? என்னைபற்றி இனி நினைக்காதே, பாண்டுரங்கனை நினைந்து உன் துக்கத்தை போக்கி கொள்" என்று சொல்லி மறைந்தான். அன்று முதல் அன்னையார் பாண்டுரங்க பூஜையில் மனத்தை செலுத்தலானார்.

ஸ்ரீமதி சரஸ்வதிபாயின் மற்ற நான்கு மக்களும் நல்ல நிலைமையிலேயே இருந்து வருகிறார்கள். அன்னையாருக்கு இரு புதல்விகள். அவர்கள் பெயர் பத்மா, கலாவதி என்பது. ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்கள் ஆற்றி வந்த தெய்வப்பணிகளை தொடர்ந்து நடத்தவேண்டிய பொறுப்பு அவரது அருமை புதல்வி சௌ. கலாவதிக்கு ஏற்பட்டிருப்பதால் கிருஷ்ணசுவாமி ராவ் அவர்களும் தமது வாழ்க்கை துணைவியோடு அக்காரியங்களில் பங்கு கொண்டு அன்னை சரஸ்வதிபாய் அவர்களின் ஆத்மாவுக்கு திருப்தி அளிப்பர் என்பது நிச்சயம்.

ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்கள் சிறுமியாக இருந்தபோது அவரது தகப்பனார் பூனாவில் மிலிடேரி அகவுண்ட்ஸ் ஆபிசில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பணியாற்றி வந்தார். அப்போது ஒரு நாள் சரஸ்வதி தன் தகப்பனுரோடு மார்கெட்டுக்கு போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது ஒரு பெரியவர் குழந்தையின் கையில் ஸ்ரீபாண்டுரங்கன்-ரக்மாயி பித்தளை விக்ரகம் ஒன்றை கொடுத்து விட்டு போனுர். குழந்தை சரஸ்வதி வெகுநாள் அவ்விக்கிரகத்தை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். பிறகு அந்த விக்ரகம் பெட்டிக்குள் சென்று விட்டது. சரஸ்வதியும் அதை மறந்து விட்டாள். 1903ம் வருடத்தில் இது நடந்தது. அதன் பின்னர் 3 வருடங்களில் சரஸ்வதிபாயின் தகப்பனுர் வேலையிலிருந்து ஓய்வுபெற்று சென்னை திரும்பினுர். மைலாபூரில் சன்னிதி தெருவில் அவர் தமது குடும்பத்துடன் வசித்து வந்தார். பின்னர் சுமார் 25 வருடங்கள் கழிந்ததும் மேலே கூறப்பட்ட குழந்தை ஸ்ரீபாநுவின் மரணத்தின் பிறகுதான் பெட்டியில் சயனித்து கொண்டிருந்த பாண்டுரங்க விக்ரகம் வெளியே வந்தது. சரஸ்வதிபாய் அவர்கள் கனவில் தோன்றிய குழந்தை ஸ்ரீபாநுவின் வார்த்தைகளை தேவ வாக்காகவே கொண்டு பாண்டுரங்க பக்தியிலும் பூஜையிலும் ஈடுபட்டார்.

சரஸ்வதிபாய்க்கு அவருடைய ஏழாவது வயதில் ஒரு மகானை தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. அவர் ஒரு தெலுங்கு பிராமணுர் ஹனுமார் உபாசகர். ஒரு சிறிய தாமிர ஹனுமான் விக்ரகத்தை வைத்து பூஜை நைவேத்தியங்கள் செய்து ஆராதிப்பார். டிப்டி கலெக்டர் கணபதி அய்யர் வீட்டில் அவர் தங்கியிருந்தார். சரஸ்வதி சிறுவயதிலேயே பகவானுடைய லீலைகளை கேட்க ஆவலுள்ளவ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ளாகையால் தன் தாயாருடன் அம்மகாளே தரிசிக்க அடிக்கடி செல் வது வழக்கம். அப்போது அம்மகான் குழந்தை சரஸ்வதியிடம் "வயது செல்ல செல்ல உன் பக்தி பெருகி பகவானை நேரில் காண் பாய்" என்று ஆசிர்வதித்தார். "சரஸ்வதிக்கோ பகவானை நேரில் காணும் அந்த ஆனந்தம் இப்போதே ஏன் கிடைக்க கூடாது?" என்று ஆர்வமாக இருக்கும். ஆனுல் காலம் வரவேண்டாமா? ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் கணவர் லோகல் பண்டு ஆடிட்ட ராக இருந்ததால் வேலை நிமித்தம் பல ஊர்களுக்கு செல்ல வேண்டி யிருந்தது. எனவே ஸ்ரீமதி சரஸ்வதிபாய் தமது கணவருடன் பல புண்ய க்ஷேத்திரங்களை தரிசிக்கும்படியான பாக்கியம் கிட்டிற்று. தாம் தரிசித்த புண்ய க்ஷேத்திரங்களைபற்றியும் அதனுல் தமக்கு கிடைத்த பேரானந்தத்தைபற்றியும் அம்மையார் தாமே எழுதிய "நம் கடமை" என்ற புத்தகத்தில் விரிவாக எடுத்துரைத்துள்ளார்.

1939ல் திருக்கோயிலூருக்கு சென்றூர்கள். அங்கே எழுந்தருளியிருக்கும் 'ரகோத்மா சுவாமிகளின்' தரிசனம் செய்து கொண்டு பிராமண சமாராதனையும் செய்துவிட்டு ஊர் திரும்பினுர்.

இவை நடந்த சில நாட்களுக்கு பிறகு ஒரு நாள் இரவு சரஸ் வதிபாய் அவர்களின் கண்களுக்கெதிரே ஒரு ஜோதி தெரிந்தது. அம்மையார் கண் கொட்டாமல் அந்த ஜோதியையே பார்த்த வண் ணம் தியானத்தில் ஆழ்ந்து விட்டார். ஜோதியிலே பரண்டுரங்கன் தோன்றினுர். அம்மையார் அந்த நித்யாநந்த ஸ்வரூபத்தை வெகு நேரம் கண்டு களித்தார். பிறகு அவரை அறியாமலேயே அவருடைய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நாவிலிருந்து கன்னட பாஷையில் தசாவதார மகிமையைபற்றிய பாடல் ஒன்று வெளி வந்தது. பாடல் முடிந்ததும் அம்மையாரின் சமாதி நிலையம் கலைந்தது. கூப்பியிருந்த கைகளை திறந்தபோது கையில் ஒரு ஒளி விசும் கல் இருக்க கண்டார்கள். பரண்டுரங்கன் தரிசனம் ஈந்ததற்கு அடையாளம்போலும் !

இதன் பின்னர் பல முறைகள் அம்மையாருக்கு இவ்வாறு சமாதி நிலை ஏற்பட்ட துண்டு. ஒவ்வொரு முறை சமாதி கலைந்ததும் கைகளில் பலவிதமான கல்களும், கெம்பு, முத்துக்களும் தோன்றின. சில சமயங்களில் தலையிலும், கண்களிலும், வாயிலும் இம்மாதிரி பிரசாதங்கள் வந்தன. அம்மையார் ஸ்தாபித்த கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் பாண்டுரங்களின் கிரீடத்தில் ஜ்வலித்து கொண்டிருக்கும் முத்து ஒரு சமயம் அம்மையார் சமாதி நிலை பெற்றபோது அவரது கண்ணிலிருந்து வந்ததாகும். சில முறைகள் அவரது வாயிலிருந்து அபூர்வமான சாலிக்ராமங்களும் வந்துள்ளன. இவைகளையெல்லாம் ஆண்டவன் லீலை என்று சொல்லாமல் வேறு எப்படி கூறமுடியும். அன்னையா ரவர்கள் இதுபோல் ஒவ்வொருமுறை சமாதி நிலை பெற்றபோதும் பல பக்தர்கள் அவர் அருகே இருந்து அக்காட்சிகளை கண்டு ஆனந்தித்தனர்.

1937ம் வருடம் அன்னையாரவர்களும் அவரது கணவர் ஸ்ரீ ஸ்வாமிராவும் பம்பாயில் இருந்தபோது அவர்களது மடாதிபதி யாகிய உத்தராதிமடம் ஸ்ரீ ஸ்ரீ ஸத்யஞான தீர்த்தஸ்வாமிகளை சந்தித்து அவரிடம் உபதேசம் பெற்றுகொண்டனர்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பகவான் பாண்டுரங்கனுக்கு மைலாப்பூரில் ஒரு கோவில் கட்டவேண்டுமென்ற அம்மையாரின் ஆர்வம் உச்சநிலையை அடைந்தது. ஆனால் அதை நிறைவேற்றுவது எப்படி? அதற்கு வேண்டிய பொருள் கைவசம் இல்லை. யாசகம் செய்ய தெரியாது. ஆனல் அம்மையார் அதற்காக கலங்கவில்லை. தமது நகைகளை விற்று 'பீமன்னபேட்டையில்' டாக்டர் ரங்காச்சாரி ரோட்டில் இரண்டு கிரவுண்டு நிலம் வாங்கினர்கள். மற்றவைகளை பாண்டு ரங்கன் தானே கவனித்துக்கொள்வான் என்ற நம்பிக்கை. அவரது நம்பிக்கை வீண்போகவில்லை. அம்மையார் கனவு கண்ட கோயில் நினைவாக மாறியது. 1940ம் வருடம் மே மாதம் முதல் தேதி 'பாண்டுரங்கன்-ரங்மாயி' விக்ரகங்கள் கோலாகலமான வைபவங் களுக்கிடையே புதிதாக கட்டி முடிக்கப்பட்ட கோயிலில் பிர திஷ்டை செய்யப்பட்டன. கூடவே கருடாழ்வாரும், ஆஞ்சநேயரும், கணபதியும் பிரதிஷ்டை செய்யப்பட்டார்கள். அன்று பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு போஜனமும், 3000 ஏழைகளுக்கு கஞ்சி யும் அளிக்கப்பட்டது. அந்த வைபவங்களை காணக் கொடுத்து வைத்தவர்கள் பெரிய பாக்கியசாலிகள் என்பதில் ஐயமில்லை. பிரதி வருடமும் பாண்டுரங்கன் பிரதிஷ்டை செய்யப்பட்ட புண்ணிய முகூர்த்தத்தின் வருடாந்திர கொண்டாட்டத்தை அம்மையார் வெகு சிறப்புடன் நடத்திவந்தார்கள். அன்று ஆயிரக் கணக்கான பேர்களுக்கு அறுசுவையுடன் கூடிய பரமான்ன போஜ னம் அளிக்கப்படுவதை பாராட்டாதவர்கள் கிடையாது. "இந்த கைய அன்னதானங்களுக்காக ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்கள் யாரிடமும் யாசகம் செய்தது கிடையாது. எப்படித்தான் இவ்வளவு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செல்வுகளை சமாளிக்கிறீரோ?" என்று ஜனங்கள் பெருமையுடனும் ஆச்சரியத்துடனும் பேசிக்கொள்வார்கள்.

எந்த நல்ல காரியத்திற்கும் நாலுபேராவது எதிராக இருப்பது நமது நாட்டின் சாபக்கேடாயிற்றே! அம்மையாரவர்களும் அதற்கு ஆளாகாமற் போகவில்லை. பாண்டுரங்கனுக்குக் கோவில் கட்ட வேண்டுமென்ற யோசனையை அவர்கள் வெளியிட்டபோதே பலர் பலவிதமான ஆட்சேபனைகளை கிளப்பினார்கள். பெரும்பாலான ஆட்சேபனைகளுக்கு பொறாமையே காரணம். ஆனால் அம்மையாரின் ஆழ்ந்த தெய்வபக்தி இந்த எதிர்ப்புகளையெல்லாம் லட்சியம் செய்யவில்லை. "இதுவும் லீலா விநோதனான என் பாண்டுரங்கனின் விளையாட்டு" என்று கூறி தமது கருமமே கண்ணாக காரியத்தில் இறங்கிவிட்டார்.

கோவில்கட்டி முடித்து பிரதிஷ்டையும் ஆன பிறகும் கூட சிலருடைய ஆட்சேபனைகள் தொடர்ந்து நடந்து கொண்டு இருந்தன. அவைகளையெல்லாம் கேட்டு அம்மையாரின் மனம் என்ன புண்பட்டிருக்குமோ? வேறு யாராவது இருந்தால் "நமக்கேன் இந்த வம்பு? ஊர் விரோதத்தை கட்டிக் கொள்வானேன்?" என்று விட்டுவிடுவார்கள். ஆனால் அன்னை சரஸ்வதிபாய் அவர்களோ இந்த எதிர்ப்புகளையெல்லாம் சமாளித்து கொண்டு புடமிட்ட பொன்போல் பிரகாசிக்கலானார்.

'நான் கண்டதும் கேட்டதும்' என்று அம்மையாரவர்கள் ஒரு புத்தகம் எழுதியுள்ளார்கள். அந்நூலில் இந்த எதிர்ப்புகளை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்னை சாஸ்வதிபாய்
1940-ல் ஸ்தாபித்த
ஸ்ரீ பாண்டுரங்கனும்.
ருக்மாயும்



அன்னை சாஸ்வதிபாய்
ஸ்தாபித்த ஸ்ரீ பத்ரி
நாராயணன்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்னை சரஸ்வதிபாய் ஸ்தாபித்த ஸ்ரீ வெங்கடேச பெருமாள்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பற்றி அவர் எழுதியுள்ளவைகளை படிக்கும்போது கண்களில் நீர் துளிர்க்கும். ஒரு நல்ல காரியத்துக்கு இவ்வளவு எதிர்ப்பா என்று ஆச்சரியமடைவோம்.

"சில கனவான்கள் நான் பெரிய வீடு கட்டிக்கொண்டு சௌக்கியமாய் இருக்க விரும்பியதால் மந்திரம் கட்டினதாகவும் இவளுக்கு உண்மையாகவே கோவில் கட்டும் உத்தேசம் இருந்திருந்தால் ஏன் கோவிலை மட்டும் கட்டிவிட்டு இவள் வேறு இடத்தில் இருக்கக்கூடாது என்றும் தூஷிக்கிறார்கள். நான் பெருமையை அடையவோ புகழ்ச்சியை உத்தேசித்தோ மந்திரம் கட்டவில்லை. இவ்வுலக சுகம் அனுபவிப்பதற்காக மந்திரத்திலேயே என் வீட்டையும் அமைத்துக் கொள்ளவில்லை. என் ஜீவப்பியந்தம் மகானுபாவனை பாண்டுரங்கனை பார்த்துப்பார்த்து ஆனந்திக்கவே மந்திரத்திலே இருக்கிறேன். நான் இப்போது இருக்கும் இடத்தை பார்த்தால் ஒருவரும் சுகத்துக்காக இங்கு வந்தவள் என்று சொல்ல மாட்டார்கள். மந்திரம் கட்டுவதற்கு முன் நாங்கள் பெரிய வீடுகளில் தான் இருந்திருக்கிறோம். இப்போது இருக்கும் இடமோ இரு சிறு அறைகள், மழை வந்தால் எல்லாம் ஜலமாய் விடும்; இருந்தபோதிலும் என் பாண்டுரங்கன் இருக்கும் இடமே அரண்மனை என்று நினைப்பது என் இயல்பு. மழை வந்தால் விழித்து நிசப்தத்தில் என் நரஹரியை தியானிக்க சந்தர்ப்பம் கிடைத்ததே என்று ஆனந்திப்பேன். லீலா விக்ரஹ ஸ்வரூபியை விட்டு விட்டு தூரத்தில் இரு என்று சொன்னால் எனக்கு எப்படி இருக்கும்? என்று எழுதியுள்ளார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பக்த மீராவும், ஆண்டாளும் நிலவண்ணக் கண்ணனையே தங்கள் காதலனாகவே நினைந்து தொழுதார். அதே வகையில் அன்னை சரஸ்வதிபாய் அவர்கள் பாண்டுரங்க மூர்த்தியை தனது செல்வக் குழந்தையாகவே பாவித்து பக்தி பூண்டொழுகினர். பராத்பர பக்தர்களின் மனதுக்கு எப்படி வேண்டுமோ அப்படி காட்சி யளித்து காப்பவனல்லவா? "நான் என் பாண்டுரங்கனை (விக்ரஹத்தை) பூஜை செய்து வரும்போது சின்னக் குழந்தைகளுக்கு சாதம் கலந்து ஊட்டுவதுபோல் அவருக்கு கலந்து நிவேதனம் பண்ணுவேன். சிறிய தொட்டிலில் படுக்க வைத்து என் தலைமாட்டில் உள்ள அலமாரியில் வைத்து இரவில் கண் விழித்து அவரை பார்த்து சின்னக் குழந்தையை முத்தமிடுவதை போல் அதை முத்தமிட்டு படுக்க வைப்பேன்" என்று ஓரிடத்தில் எழுதியுள்ளார்.

துங்கபத்திரா நதிக்கரையில் பிருந்தவனஸ்தராக எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளை மாத்வ மதத்தினர் குருவாக போற்றி வணங்குகின்றனர். சிறு வயதிலேயே பகவத் பிரேமையால் பிரகாசித்த பக்த சிரோன்மணியான பிரகலாதனின் அம்சம் அவர் என்பது அச்சமூகத்தாரின் கொள்கை. சென்னை மாநகரில் ஆயிரக்கணக்கான மாத்வர்கள் இருந்தும் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளை தொழுவதற்கு வசதியாக அவருடைய பிருந்தாவனம் இருக்கவில்லை. சில வருடங்களுக்கு முன்னர் சென்னையில் ஒரு பிருந்தாவனம் கட்டுவதற்காக சில பெரிய மனிதர்களும், பணக்காரர்களும் முயற்சி எடுத்துக்கொண்டார்கள். ஆனல் அவர்கள்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முயற்சி வெற்றி பெறவில்லை. குரு ராகவேந்திரரின் பிருந்தாவனத்தை ஓரிடத்தில் கட்டுவதென்றால் சாமானியமான காரியமல்ல. பொன்னும், பொருளும் மாத்திரம் இருந்துவிட்டால் போதாது. அம்மகானின் அருளும் கிட்டவேண்டும். அன்னையார் அவர்களுக்கு அந்த அருள் கிட்டியது. குரு பல முறை அன்னையாரவர்களின் கனவில் தோன்றி தமக்கு ஒரு பிருந்தாவனம் கட்டுமாறு பணித்தார். அப்பணியை அன்னையார் தொடங்கியதும் பலர் பலவிதமான தொந்தரவுகளை அவருக்கு ஏற்படுத்தினார்கள். ஆனால் அன்னையார் அவை ஒன்றையும் பொருட்படுத்தாமல் தமது காரியமே கண்ணாக முயன்றார். அதன் பயனாக 1946ம் வருடம் 26ம் தேதி ஏப்ரல் மாதம் கோலாகலமான வைபவங்களுக்கிடையே ஹனுமார் பிரதிஷ்டையும், பிருந்தாவன பிரதிஷ்டையும் போஜன சமாராதனையும் நடந்தேறியது. அதேபோல் பிரதி வருடமும் ஆராதனை நாளன்று 1000 கணக்கானவர்களுக்கு போஜனமளித்து வந்தார் அன்னையார். இவ்வொரு காரியத்தை செய்ததின் மூலம் அன்னையாரவர்கள் சென்னையிலுள்ள மாத்வ சமூகத்துக்கு ஏன் ஆஸ்திக சமூகத்திற்கே பெருந் தொண்டாற்றியுள்ளார் என்பது நிச்சயம்.

இதன் பின்னர் 1949ம் வருடம் மே மாதத்தில் அன்னையாரவர்கள் தமது குடும்பத்துடனும், சில பக்தர்களுடனும் பத்ரிக்கு யாத்திரை சென்றார்கள். பம்பாய் நகரத்தில் பெரிய வர்த்தக பிரமுகரான ஸ்ரீ முகுந்தராவ் ராணேயும் அவரது மனைவியரான ஸ்ரீமதி குலாப்பாய் ராணேயும் அன்னையாரோடு இப்புனித

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யாத்திரையில் கலந்து கொண்டார்கள். இந்த யாத்திரையின்போது நிகழ்ந்த பல அதிசயங்கள் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் தெய்விக சக்தியை புலப்படுத்துவனவாக விளங்கின. உதாரணமாக ஒரு முக்கிய சம்பவத்தை கூறலாம். பத்ரியில் சுவாமி தரிசனம் முடிந்து ஊர் திரும்ப எல்லோரும் நினைத்தபோது அவர்களுடன் துணையாக வந்த பண்டா "அம்மா, கேதார்நாத் லிங்கத்தை பார்க்காமல் திரும்பக்கூடாது" என்றான். "நான் ஏற்கனவே பார்த்திருக்கிறேன் அப்பா" என்றார் அன்னையார். பண்டாவுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. லிங்கம் எப்படியிருக்குமென அன்னையார் விவரிக்க ஆரம்பித்ததும் அவன் ஆச்சரியம் அடைந்தான். ஆனால் அவனுக்கு இன்னும் ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருப்பதை அவன் அறியவில்லை. அன்னையாரவர்கள் அப்போது சமாதி நிலை அடைந்தார்கள். சமாதி நிலை விழித்தபோது அவர் கைகளில் அழகிய 'கேதார்நாத் லிங்கம்' இருப்பதை கண்டு கூடியிருந்தவர்கள் எல்லோரும் அதியாச்சரியமுற்றனர். அன்னையாரவர்கள் அந்த லிங்கத்தை ஸ்ரீ முகுந்தராவுக்கு பிரசாதமாக அளித்துவிட்டார்.

இதன் பின்னர் ஸ்ரீ தத்தாத்ரேய மூர்த்தியின் பிரதிஷ்டையும் திருக்கோவிலூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ரகோத்தம ஸ்வாமிகளின் பிருந்தாவன பிரதிஷ்டையும் அன்னையாரின் முயற்சியால் நடைபெற்றன.

இவ்வளவு மகத்தான காரியங்களை சாதாரண மனிதன் சாதிக்க முடியாது என்பதை சொல்ல வேண்டிய தேவை இல்லை. அது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மட்டுமல்ல பணமும், புகழும் இருந்தாலும் இத்தகைய காரியங்களைச் சாதித்து விடமுடியாது. பகவானிடம் அந்தரங்க பக்தி வேண்டும். அவனது அருள் பெற வேண்டும். சேவை உணர்ச்சியும், அன்பும் வேண்டும். இவ்வளவும் அன்னையாரவர்கள் பெற்றிருந்தார்கள். ஆகையால் தான் இவ்வரும் பெரும் பணிகளை அவரால் செய்ய முடிந்தது.

அன்னை சரஸ்வதிபாய் அவர்களின் பக்தி கோயில்கள் கட்டுவதோடு நின்று விடவில்லை. தெய்வம் கோவில்களில் மட்டும் இருப்பதாகவும் அவர் நினைக்கவில்லை. ஒவ்வொருவரின் இதயத்திலும் பகவான் வசிக்கிறார் என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். ஈஸ்வரனுக்கு சேவை செய்வதென்றால் அவனது படைப்பாகிய மனித குலத்திற்கு செய்வது தான் என்பது அவர் தத்துவமாக இருந்தது.

தினமும் பலபேர் பலநேரங்களிலும் அன்னையாரை தேடிக் கொண்டு பாண்டுரங்கன் சன்னதிக்கு வந்த வண்ணமாகவே இருப்பார்கள். ஒவ்வொருவருக்கும் ஏதோ கவலை 'கணவனின் நடத்தை சரியாயில்லையே' என்ன செய்வேன்? 'பிள்ளை சரியாக படிக்க மாட்டேன் என்கிறானே' என்ன செய்வேன்? 'மாட்டுப் பெண் இன்னும் மலடியாகவே இருக்கிறாளே' எப்போதுதான் அவள் வயிறு திறக்கும். 'மனைவியின் உடல் நிலை எப்போது சரியாகும்?' "மாப்பிள்ளைக்கு நல்ல உத்தியோகம் கிடைக்க ஏதாவது வழிஉண்டா" இப்படி ஒன்றல்ல, இரண்டல்ல பல கவலைகள். அன்னை சரஸ்வதிபாய் அவர்கள் புன்முறுவலோடும் அமைதி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யோடும் அவ்வளவு பேருடைய கவலைகளையும் தனது கவலைகளாக ஏற்றுக்கொள்வார். தைரியம் சொல்வார். யோசனை கூறுவார். பரிகாரம் தேடுவார், தெம்பூட்டுவார். நிராசையோடு வந்தவர்கள் நம்பிக்கையோடு திரும்பிச் செல்வார்கள். கவலையோடு வந்தவர்கள் களிப்போடு திரும்பி செல்வார்கள்.

இது மாத்திரமா? அன்னையார் அவர்களிடம் சில மருந்துகளும் இருந்தன. மூலிகைகள் சிலவற்றிலிருந்து சில மருந்துகளைத் தயாரிக்கும் வகையை ஒரு மகான் அன்னையாரவர்களுக்கு சொல்லியிருந்தார். அவைகளை பலருக்கு அளித்து குணப்படுத்தினர்.

இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டுமென்ற ஆர்வம் அன்னையாரவர்களுக்கு இருந்தது. ஆனால் தமது வாழ்க்கை முடியும் தறுவாயை அடைந்துவிட்டது என்பதை அன்னையார் முன்னரே உணர்ந்து விட்டார். செயற்கரிய காரியங்களை செய்து முடித்தபோதிலும் அவரது உடல் நிலை எப்போதும் அவருக்கு துன்பத்தை அளித்துக்கொண்டேதான் இருந்தது. அவர் அதை பொருட்படுத்தாவிட்டாலும் கூட கொஞ்சம் கொஞ்சமாக தசையாலும் நரம்பாலும் ஆகிய தேகம் க்ஷிணித்துக்கொண்டுதான் வரலாயிற்று.

நல்லவர்களுக்கு சாவு ஓர் அடையாளம் என்று சொல்வார்கள். சரஸ்வதிபாய் அவர்கள் எய்திய மரணம் அவர் எவ்வளவு உயர்ந்தவர், நல்லவர், தெய்வாம்சம் பொருந்தியவர் என்பதற்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எடுத்துக்காட்டாக உள்ளது. அன்னையாரவர்கள் ஆகஸ்ட் மாதம் 9-ந் தேதி வெள்ளிக்கிழமை பகல் பன்னிரண்டு மணிக்கு பூத உடலை நீத்து புகழுடம்பு எய்தினர். அன்று எப்பேர்ப்பட்ட நாள்! தமிழ்நாட்டு பெண்கள் கொண்டாடும் மிக முக்கியமான வரலக்ஷ்மி விரதமும், பௌர்ணமியும், ஆடி வெள்ளிக்கிழமையும் கூடிய நாள்! சத்திய நாராயண பூஜை செய்யப்படும் நாள்! முகமதியர்களும் தொழுகையில் ஈடுபடும் நாள்! கிறிஸ்துவ மதஸ்தாபகரான ஏசு நாதர் சிலுவையில் அறையப்பட்ட நாள்.

தம்முடைய மரணத்தால் யாருக்கும் எந்தவிதமான துன்பமும், கஷ்டமும் ஏற்படக்கூடாதென்பது அன்னையாரின் விருப்பம் போலும். எனவேதான் எல்லோர் விடுகளிலும் அன்றைய பூஜையும், போஜனமும் முடியும்வரையில் அவரது உயிர் உடலைவிட்டு அகலவில்லை. தாம் இறந்த பிற்பாடு தமது ஈமச்சடங்குகளை எப்படி நிறைவேற்ற வேண்டுமென்பதை குறித்தும் கூட அன்னையாரவர்கள் தமது உறவினர்களுக்கு எடுத்துக்கூறி அதற்கு வேண்டிய பொருளையும் கொடுத்து விட்டுத்தான் உயிர் நீத்தார்கள். உயிர் பிரிவதற்கு முன் கடைசியாக அவர்கள் கூறிய வார்த்தைகள் "அதோ தேர் வந்து காத்துக் கொண்டிருக்கின்றது. நான் போய்வருகிறேன்" என்பதாம்.

அன்னையாரவர்கள் அடிக்கடி ஒரு விஷயம் சொல்வார்கள் "எல்லா விஷயங்களிலும் முதலடி வைக்க வேண்டியவர் கணவர் (சுவாமி ராவ்) நான் அவரை பின்பற்றி நடக்க வேண்டியவள். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நான் அவரை பின்பற்ற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாட்டேன். நான் காட்டும் வழியில்தான் அவர் வரவேண்டும்." இப்படி சொல்லும்போது அன்னையார் எதை குறிப்பிட்டார் என்று சொல்லவும் தேவையோ? பாரத நாட்டு பத்தினி பெண்கள் அனைவரும் விரும்புவது எதையோ அதையே அன்னையாரும் விரும்பினர். அவரது விருப்பப்படியே தீர்க்க சுமங்கலியாக மஞ்சளுடனும், குங்குமத்துடனும், மலர்களுடனும் அன்னையார் மறைந்து விட்டார்கள். அன்னையார் அவர்களுடைய புனித அஸ்தி அவர் மறைந்த சில நாட்களுக்குள்ளாக புனித கங்கையிலே கலக்கப்பட்டது. அன்னையார் அவர்களின் விருப்பப்படியே இப்பணியை அவரது அன்புக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரரான திரு. J. B. கிருஷ்ணமூர்த்தி ராவ் அவர்கள் பக்தி பூர்வமாக நிறைவேற்றினர்கள். அன்னையாரின் பூத உடலை இனி நாம் காண முடியாதென்பது உண்மை. ஆனல் அவர் ஆற்றிய பணிகள் என்றும் நம்மிடையே நிலவி அந்த புனித ஆத்மாவின் நினைவை நமக்கு அளித்துக்கொண்டிருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

**வாழ்க அன்னை சரஸ்வதிபாயின் திருநாமம்!**

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்னை ஸரஸ்வதிபாய்
பாண்டுரங்க மந்திரத்தில்
ஸ்தாபித்த ஸ்ரீ ராகோத்தம
தீர்த்த ஸ்வாமிகளின்
பிருந்தாவனம்



ஸ்ரீ லக்ஷ்மி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்னை ஸரஸ்வதிபாய் ஸ்நாபித்த ராகவேந்திர தீர்த்த ஸ்வாமிகளின்
பிருந்தாவனம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

